சென்னிமலை முருகன்

# புலவராற்றுப்படை.

(குறிப்புரையுடன்)

ஆசிரியர் :

வித்துவான், வே. ரா. தெய்வசிகாமணி,



வெளியீடு :

சென்னிமலைத் தலபுராண
வெளியீட்டுக் குழுவினர்.

# சென்னிமலை முருகன்

# புலவராற்றுப்படை.

(குறிப்புரையுடன்)

454

ஆசிரியர் :

வித்துவான், வே. ரா. தெய்வசிகாமணி,

வேலம்பாளையம், எழுமாத்தூர் (வழி). ஈரோடு R. M. S.

பராபவ ஹு ஆனி மீ.

உரிமை ஆசிரியருக்கே.] 1966. [விலை 75 காசு.

சிவாஜி பிரஸ், சென்னிமலை. போன் நெ. 69.

கணபதி துணை.

# முகவுரை.

—∘∘⁂∘∘—

## குறுந்தொகை.

"தாமரை புரையுங் காமர் சேவடிப்
பவளத் தன்ன மேனித் திகழொளிக்
குன்றி யேய்க்கு முடுக்கைக் குன்றின்
நெஞ்சு பகவெறிந்த செஞ்சுடர் நெடுவேல்
சேவலங் கொடியோன் காப்ப
ஏம வைக லெய்தின்று லுலகே."

— பாரதம் பாடிய பெருந்தேவனார்.

செந்தமிழ் மொழிக்குரிய பிரபந்தங்கள் தொண்ணூற்ருறு வகையன. புதிதாகச் செய்யப்பெறும் அப் பிரபந்தங்கள் "விருந்தே தானும் புதுவது கிளந்த யாப்பின் மேற்றே" எனத் தொல்காப்பியனார் கூறிய விருந்து என்னும் யாப்பின் பாற் படுவனவாகும். அவற்றுள் ஆற்றுப்படையும் ஒன்ரும். அவ்வாற்றுப் படையானது புலவராற்றுப்படை, பாணாராற்றுப்படை, பொருநராற்றுப்படை, விறலியராற்றுப்படை, கூத்தராற்றுப்படை என ஐந்து வகைப்படும்.

புலவராற்றுப்படை யென்பது பரிசில் பெற்று வந்த புலவனொருவன் பரிசில் வேண்டி வந்த புலவன் ஒருவனை எதிர்ப்பட்டு நீயும் ஆண்டுச் சென்ருல் சிறந்த பரிசில் பெற்று வரலாம் எனத் தனக்குப் பரிசில் நல்கிய தலைவனுடைய நாடும், ஊரும், பெயரும், ஈகையுமாகியவற்றைப் புகழ்ந்து கூறி அத்தலைவன்பாற் செல்லுமாறு வழிப்படுத்துவதாக மூன்றடிச் சிறுமையும் ஆயிரமடிப் பெருமையும் உடைய அகவற்பாவினுற் பாடுவது. இதன் இலக்கணம் பன்னிரு பாட்டியல் முதலிய பாட்டியல் நூல்களிற் கூறப் பெற்றுள்ளது.

"புகழகவ லாற்புலவர் பாணர் கூத்தர்
பொருநர்முத லவருரையாற் றெதிர்ப்பா டாகப்
பகரும தாற்றுப் படையாம்" — சிதம்பரப் பாட்டியல் 35.

ஆற்றுப்படை பாடாண்டிணையின் பாற்படும்.

புலவராற்றுப்படை என்பது பாடாண்டிணைக்குரிய கடவுள் வாழ்த்து, அறுமுறை வாழ்த்து, மக்கள் வாழ்த்து என்னும் மூவகை வாழ்த்துக்களுள் ஒன்ருகிய அறுமுறை வாழ்த்தின்பாற் பட்டது. வாழ்த்து என்பது புகழ் கூறுவதும், வாழ்கென வாழ்த்துதலுமாம். "வாழ்த்தலே துதித்த லாசி" என்பது அரும்பொருள் விளக்க நிகண்டு. அறுமுறை வாழ்த்து—அமரர் வாழ்த்து. இதனை "அமரர்கண் முடியும் அறுவகையானும்" என்னும் தொல்காப்பியப் புறத்திணையியல் 21-ம் சூத்திரவடிக்குப் புலத்துறை முற்றிய நலத்துறவாளராகிய இளம்பூரணவடிகள் "அமரர்கண் முடியும் கொடிநிலை, கந்தழி, வள்ளி, புலவராற்றுப்படை, புகழ்தல், பரவல் என்பனவற்றினும்" என எழுதிய உரையினுலும்,

"அமரர்கண் முடியும் அறுவகை யாகிய
கொடிநிலை கந்தழி வள்ளி குணஞ்சால்
புலவரை யவர்வயிற் புகழ்ந்தாற்றுப் படுத்தல்
புகழ்ந்தனர் பரவல் பழிச்சினர்ப் பணிதல்"

என ஐயனரிதனரின் புறப்பொருள் வெண்பாமாலைப் பாடாண் சூத்திரத்தாலும் அறிக.

அறுமுறை வாழ்த்து நெறிகளில் ஒன்ருகிய புலவராற்றுப்படையென்பது இரண்டாம் வேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாய் நூலுக்குப் பெயராய் விளங்குகிறது. இது சிறப்பாகத் தேவர்களுக்குரியதெனத் தெரிகிறது. ஆசிரியர் ஐயனரிதனர் அறுமுறை வாழ்த்துக் கூறுமிடத்து. "அமரர்கண் முடியும் அறுவகையாகிய" என்று கூறியதல்லாமல் அப்புலவராற்றுப்படைக்கு விளக்கம் கூறும் பாடாண் படலத்திலுள்ள நாற்பத்திரண்டாவது கொளுவில்,

"இருங்கண் வானத் திமையோ ருழைப்
பெரும் புலவனை யாற்றுப் படுத்தன்று"

என்ற இமையோராகிய தேவர்பால் ஆற்றுப்படுத்திக் கூறுதலானும், ஒல்காப் பெரும் புகழ்த் தொல்காப்பியனரும் இதனையுட் கொண்டே "அமரர்கண் முடியும் அறுவகையானும்" என்று புலவராற்றுப்படையை அடக்கிக் கூறுவதானும் அறியலாம்.

அமரர்க்கே சிறப்பாகவுரிய புலவராற்றுப்படையானது அவ்வமரர்க்கே யன்றி, அமரரினும் உயர்ந்த கடவுளுக்கும், அமரரின் தாழ்ந்த மக்களுக்கும் உரியதாக இலக்கியங்களில் காணப்படுகின்றது.

சென்னிமலை முருகன் புலவராற்றுப்படை என்பது கொங்கில் முதன்மையாக விளங்கும் பூந்துறை நாட்டின் கண்ணுள்ள குன்றுதோறுடல் திருப் பதிகளில் ஒன்ருய் விளங்கும் சென்னிமலையின்கண் தண்டபாணியாய் வீற்றிருந்து தமது திருவடி நீழலில் உறையும் உயிர்களுக்கு இம்மை மறுமை என்னும் இருமை இன்பங்களையும் தந்து அருள் புரியும் முருகக் கடவுள் மீது பாடப்பட்ட புலவராற்றுப் படையாம். இந்நூல் பரந்த மொழிகளால் ஆயிரத்தை யடுத்த அடிகளின் நிமிர்ந்து செல்லுதலினுல் தொல்காப் பியங் கூறும் தோல் என்னும் செய்யுள் வகையைச் சேர்ந்தது.

இந் நூலானது ஆசிரியன் மாணுக்கனுக்குச் செய்யும் உபதேசம் போன்ற உபதேசக் கிரமத்தில் அமைந்ததாகும். உத்தம இயல்புடைய நல்லாசிரியன் ஒருவன் மும்மல வாதனையால் வரும் பிறவித் துன்பத்திற் கஞ்சி வீடு பெற விரும்பும் நன்மாணுக்கன் ஒருவனை எதிர்ப்பட்டு அவனது வேட்கையை அறிந்து, அவன் விரும்பியபடியே மெய்ப் பொருளை உபதேசித்து வீடுபேறெய்தச் செய்வன். அதுபோல இந் நூலும் மேலான நூலறிவையும், முருகக் கடவுளின் அருளையும் பெற்ற புலவனெருவன் வறுமையால் வாடித் தீர்வு காணுது வருந்தியலையும் புலவனெருவனை எதிர்ப்பட்டு அவனது வறுமை நிலையைக் குறிப்பினுலறிந்து அருள் வள்ளலாகிய சென்னிமலைச் செவ்வேட் பெருமான் இயல்பினை உபதேசித்து அவன்பாற் சென்று அற முதலாகிய நாற்பெரும் பயன்களையுமடையுமாறு வழிப்படுத்துவது கூறுதல் காண்க.

இந் நூலின்கண் சென்னிமலையின் சிறப்பு, தீர்த்தங்கள், தெய்வீகங்கள், அருளாடிகளின் இயல்பு, தண்டபாணியின் திருவுருவக் காட்சி, வழிபாட்டு முறை, தலபுராணச் சிறப்பு, சென்னிமா நகர்ச் சிறப்பு, முருகக் கடவுளின் புகழ், அவன் அருள் செய்யும் திறம் முதலிய தல சம்பந்தமான செய்திகளும்; மற்றும் தமிழ் நூல்களின் இயல்பும், புலவர்தம் புலமைத் திறமும், அவரது வறுமை நிலைமையும், அதைக் கடத்தற்குத் திருவருள் நெறியே செந்நெறி யென்பதும் ஆகிய செய்திகளும்; கொங்கு, பூந்துறை நாடுகளும், காவிரி

காஞ்சியென்னும் ஆறுகளும், நானில வளமும் முதலாகிய நாட்டைப்பற்றிய செய்திகளும் ஆங்காங்கே கூறப்பட்டு உள்ளன.

இந்நூலைப் பயில்வோர் மேற்கூறிய பலவகையான செய்திகளைப் படித்து இன்பமடைவதோடு சென்னிமலை முருகன் திருவடிகளுக்காட்பட்டு அவனருளால் எல்லாவகையான நலன்களுமடைந்து இன்பம் எய்துவர்.

எம்மைப் பூந்துறை நாட்டில் பொலிவுற வாழ்விக்கும் சென்னிமலைக் கந்தனுக்குச் சீர்மிகு நூலொன்றை இயற்ற வேண்டுமென என் உள்ளத்தில் தோன்றிய வேட்கையே இந்நூல் இயற்றக் காரணமாயிருந்தது. இத் தமிழ் மாலையை முத்தமிழால் வைதாரையும் வாழவைக்கும் வள்ளல் பெருமானாகிய சென்னியங்கிரியான் தன் திருத் தோள்களில் அணிந்துள்ள கடம்ப மாலையுடன் அணிந்து மகிழ்வான் என்பது எனது நம்பிக்கை. ''முன்னோர் மொழி பொருளே யன்றி அவர் மொழியும் போன்னே போற் போற்றுவம்'' என்பதற் கிலக்கியமாக அறிவு மாட்சிமையுடைய முன்னோர் நூல்களின் சொல்லும் பொருளும் அமைய இந்நூலை யாத்துள்ளேன்.

> ''பித்தர் சொன்னவும் பேதையர் சொன்னவும்
> பத்தர் சொன்னவும் பன்னப் பெறுபவோ''

என்ற கவிச் சக்கரவர்த்தி கம்பரின் கூற்றிற்கிணங்க முத்தமிழ் நூல்களையும் முறையுறக் கற்றறிந்த உத்தம வித்துவான்களாயுள்ளோர் இதில் குற்றமாராய மாட்டார்களென நம்புகிறேன். அருளுள்ளம் படைத்த அன்பர்கள் இந்நூலின் கண் செய்யவேண்டிய திருத்தங்களை அறிவிப்பாராயின் அடுத்த பதிப்பிற் சேர்த்துக்கொள்வேன்.

இந்நூல் முழுவதையும் படிக்கக் கேட்டு மனமுவந்து சிறப்புப் பாயிரம் வழங்கிய புலத்துறை முற்றிய நலத்துறை நாவலரும், எனது பேரன்பிற்குரிய பெரியருமாகிய பண்டித அ. கந்தசாமிப் பிள்ளை அவர்களுக்கு எனது மனம் நிறைந்த நன்றி யாண்டும் உரியதாகட்டும்.

இங்ஙனம்,

வித்துவான். வே. ரா. தெய்வசிகாமணி,

*30—6—1966.]* எழுமாத்தூர், வேலம்பாளையம்.

# இந்நூலின் பொருட் சுருக்கம்.



பாண்டிய நாட்டின் தலைநகரமாகப் பொற்றாமரைக் குளக் கரையில் விளங்கும் மதுரை மாநகரில் சிவபெருமான் சங்கப் புலவர்களுடன் கூடி ஆராய்ந்த தமிழ்மொழியிலுள்ள பத்துப்பாட்டு முதலிய தமிழ் இலக்கிய நூல்களையும், மற்றும் தொல்காப்பியம் முதலாகிய சிறந்த நூல்களையும் தெளிவுறப் பயின்று, புலமைத் தேர்ச்சி பெற்றுக் கவிதை வாழ்வு வாழ்ந்த புலவனொருவன் வறுமையால் வாடிப் பரிசில் நல்கும் கொடையாளியை நாடிப் பாலைநிலமாகிய காட்டு வழியிற் சென்றனன்.

அது சமயம், பரிசில் பலபெற்றுச் சிறப்புடன்வந்த புலவனொருவன் பரிசில் வேண்டிவந்த அப்புலவனை யெதிர்ப்பட்டு அவனது வறுமைநிலையைக் குறிப்பாலறிந்து வருத்தமுற்று முத்தமிழ் சொரிதலின் மும்மதயானை போன்ற புலவனே! வறுமையால் வாட்டமுற்றுப் பூனைபோலாயினை. பொருள் மிகுந்த செல்வர் பலரிடம் சென்று பாடியும், அவர் ஒன்றும் கொடாமையினால் குறிப்பறிந்து உதவும் கொடைக் குணம் மிகுந்த குடிப்பிறப்புடைய கொடையாளியை நோக்கி, வெயில் மிகுந்த பாலைநிலமாகிய கொடிய காட்டு வழியில் வந்து பருக்கைக் கல் உறுத்தியதனால் உண்டாகிய கொப்புளங்களில் தைத்த வேலின் முட்களைப் பிடுங்கிப் பதைப்புறுகின்றாய். பாவலனே! செல்வமும் ஆடையும் சிறப்புறப் பெற்றுவரும் என்னை நீ அறியாயோ? யான், வறுமை மிகுந்த புலவர் குடிப்பிறந்த புலவன் மகன். பூமியை யாளும் புரவலனுடைய மகனல்லன். நீயும் நானும் ஒத்த குடிப் பிறப்புடையோம். என்னை நீ வேறாக எண்ண வேண்டாம். அகத்தியன் வளர்த்த அருந்தமிழ் உன்னைச் சிறப்புற வாழச் செய்யும். அறிஞர்கள் வறுமையின் கொடுமை நோக்கி அதனை மிகவும் வெறுத்தனர். வறுமையிலும் மனந்தளராது திருவருள் நெறியில் சென்று உயர்ந்தோருமுளர். வறுமையும் நன்மை தருவதாகக் கொண்டு அதனை வேண்டுமென்று விரும்பினருமுண்டு.

வறுமையின் காரணமாக நீ உய்திபெறும் காலம் வந்தது. நீ முன்செய்த நல்வினை கூட்ட என்னை எதிர்ப்பட்டாய். நூல் முழுதுமுணர்ந்த புலவனே! முன்பு நானும்

உன்னைப்போல் வறுமையால் வாடி நோய்மிகப் பெற்று அவை தீர்தலின் பொருட்டுச் செல்வர்களிடமும், மருத்துவர் களிடமும் சென்றேன். சென்றும், வறுமையும் நோயும் தீரப் பெறுமல் மிகவும் வருந்தித் துயர்தாழாமல் புண்ணிய நதி யொன்றில் மூழ்கித் தீவினை தீர உயிர்விடுதலே தக்கதென்று காவிரி நதியை நோக்கி வடதிசை வழியிற் சென்றேன்.

அவ்வழியில் வளங்கள் யாவும் நிறைந்த உயர்ந்த மலையொன்றினைக் கண்டேன். அம்மலையின் காட்சி என் உள்ளத்தைக் கவர்ந்தது. அக் காட்சியால் என் துன்பங் களும் சிறிது சிறிதாகத் தீர்ந்தன. ஆதலின் உள்ளத்தில் மிகவும் அதிசய மடைந்த நான் அவ்விடத்துள்ள பெரிய ரொருவரை நோக்கி நீர் இம்மலையின் பெயரையும் மகிமை களையும் எனக்குச் சொல்ல வேண்டுமென்று வேண்டினேன்.

அவ்வறிஞர், இம்மலைக்குச் சென்னிமலை யென்பது பெயர். இம்மலையைச் சார்ந்து விளங்கும் சரவண தீர்த்தத் தில் நீராடி மலைமேற் சென்று ஒருமுகவுருவில் தண்டபாணியாய் வீற்றிருக்கும் முருகக் கடவுளுடைய குஞ்சிதமாயுள்ள திருவடிகளைக் காண்போர் வறுமையுருதவ ராய் எந்நாளும் செல்வம் பொருந்த வாழ்வர் என்று கூறினர்.

பின்பு நான், மலர்கள் நிறைந்த சரவண தீர்த்தத்தில் நீராடி மலைமேற் சென்று செங்காந்தள் மலர் சென்னியிற் பொலியத் தண்டுதாங்கிய வலக்கரமும், இடையிற் சேர்த்த இடக்கரமும், பவளம்போன்ற பாதங்களும் திகழ விளங்கும் முருகக் கடவுளைக் கண்களி கொள்ளத் தரிசித்து வணங்கி நின்று, "சென்னிமலையிற் செம்பொருள் முருகா! நின்னுடைய பதினறு நாயங்களை என்றும் அன்புடன் சொல்லி நின் திருவடி நீழலில் யாமும் எம் சுற்றத்தாரும் வழிவழியாகச் சார்ந்து வறுமையும் நோயுமின்றி இன்புற வாழுமாறு அருள் செய்வாய் என்று வேண்டினேன்.

அப்பொழுது அருச்சகனெருவன் வந்து நீறும் சந்தன மும் மலர்மாலையும் தந்து நீ இம்மலையுச்சியில் கோவில் கொண்டு விளங்கும் வள்ளி தெய்வயானையாரையும் வணங் கிப் பயன்பெறுக வென்றனன். அவன் கூறியவாறே மலை உச்சியில் சென்று தாமரை மலர் விளங்கும் திருக்கரமுடைய வள்ளியம்மையார் வலப்பக்கமாகவும், கழுநீர் மலர்

(நீலோற்பலம்) கரத்தில் திகழ விளங்கும் தெய்வயானை இடப்பக்கமாகவும் வீற்றிருந்தருளும் அழகிய காட்சியைக் கண்டு அன்புடன் வணங்கித் துதித்து நின்றேன்.

அது சமயம் திருநீறும், உருத்திராக்க மணியும், வெண்ணிற வாடையு மணிந்த அருளாடிகள் மடத்தின் தலைவராகிய அடியவரொருவர் முகமலர்ச்சியுடன் என்முன் வந்து என் கரத்தைப் பிடித்துச் சென்று மண்டப மொன்றில் அமரச் செய்து சென்னிமலை முருகன் உனக்கு மிகுதியும் அருள் செய்தனன். நீ நல்வாழ்வுறு கெனக் கூறித் திருநீற்றை என்னுடைய நெற்றியில் பூசி வாழையிலையை விரித்துப் பலவகையான சுவையுணவினைப் படைத்து உண்ணச் செய்தனர் உண்டபின் என் முகத்திலுண்டான மலர்ச்சியைக் கண்டு மகிழ்ந்த அடியவர், என்னை நோக்கி நீ முன் செய்த பெருந்தவம் கூட்டிவைத்த படியால் இம்மலையை வந்தடைந்தாய். இம்மலையின்கண் போனவுயிருடல் புகுந்திடச் செய்யும் சஞ்சீவனி முதலாகிய நால்வகை மருந்துகளும், கையாதவெட்டியும், கருநொச்சியும், வெண்சாரைப் பாம்பும், காஞ்சுனையும், காகமேருத கூடமும், மாமாங்கச் சுனையும், சித்தர் குகையும், தெய்வ மூலிகையும், பவளக் குறிஞ்சியும், கல்லில் முளைத்த புல்லுருவியு மாகிய அற்புதங்கள் பலவுமுள்ளன. இம்மலையில், முருகனுக்கும், வள்ளி தெய்வயானைக்கும் கோவிலும் பிரதிஷ்டையும் தேர்விழாவும் செய்து வாழ்ந்த சரவண முனிவன் செய்த தலபுராணமும் உண்டு. சென்னிமலை முருகனைத் தரிசித்து வணங்குவோர் செல்வமும், வலிமையும், கல்வியும் பெற்று மனைவி மக்களுடன் இன்புற வாழ்ந்து முடிவில் சிவஞான சித்தியும், சீர்பெறு முத்தியும் பெறுவர் என்று சொல்லிச் செந்நிறமுடைய பட்டுடையை யெடுத்து என்னுடைய இடுப்பில் உடுத்திப் பொன்னும் மணியும் முதலாயுள்ள பலவகைப் பொருள்களையும் ஆடைகளையும் பரிசிலாகத் தந்து வாழ்த்தினர். நான் அவரை வணங்கி விடைபெற்றுக் கொண்டு வந்தேன்.

புலவ! வாழி, யான் சொல்வதைக் கேட்பாய். நீயும் சென்னிமலையின்கட் சென்று முருகக் கடவுளைத் தரிசித்துப் பாமாலை சூட்டி வணங்குவையாயின் வறுமையும் நோயும் வாய்விட்டோடச் செல்வமும் இன்பமும் சீர்த்தியும் பெறுவாய். சென்னிமலை, கொங்கு இருபத்து நான்கு

நாடுகளில் ஒன்ருய் முதன்மையுற்று விளங்கும் பூந்துறை நாட்டில் வளமிகுந்த காஞ்சிமா நதியின் வடதிசைக்கண் உள்ளது. அம்மலேயைச் சூழ்ந்து குறிஞ்சி நிலமும், முல்லே நிலமும், மருத நிலமும், பாலே நிலமும், தத்தமக்குரிய வளங் களுடன் சிறந்து விளங்கும். வளமிகுந்த சென்னிமலே மேற் செல்குவையாயின் முதலில் வழியிலுள்ள மலேவழி விநாயக ரையும், இடும்பனேயும் முறையே வணங்கி மலேமேற் சென்று அங்குத் தல விநாயகராக விளங்கும் சந்தி விநாயகரை வணங்கவேண்டும். பின்பு, அங்குத் தண்டபாணியாய் விளங்கும் முருகக் கடவுளின் திருமுன்பில் சென்று “கன்னியம்பிகை சேய் என்பது முதல் கந்த” என்பது வரையிலுமுள்ள அவனுடைய புகழுரைகளேக் கூறித் துதிப்பாய். அத்துதி மொழிகளேக் கேட்டருளிய சென்னிமலேக்குரிய முருகக் கடவுளானவன். நம் புலவன் வந்தனன் என்று சொல்லித் தன் மனதில் அருள் பெருகக் கண்களால் நோக்கி உன் தீவினேகள் விலகும்படி செய்து உனக்கு வேண்டிய அறமுதலாகிய நால்வகைப் பயன்களேயும் பரிசிலாகத் தந்தருளுவான்.



உ

கோயமுத்தூர் அரசினர் கல்லூரியின் முன்னுள் தமிழ்ப் பேராசிரியரும், மதுரைத் தமிழ்ச் சங்கப் புலவரும், பேரூர்வாழ் முதுபெரும் புலவரும், இலக்கண நிறைகடலுமாகிய

## பண்டித, அ. கந்தசாமிப் பிள்ளையவர்கள்

இந்நூலுக்கு மனமுவந்தளித்த

# சிறப்புப் பாயிரம்.



### அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

பூமகள்தன் வதனமெனப் பொலிகொங்கு
மண்டலத்திற் புகழின் மிக்குத்
தேமலிநற் றிலகமெனத் திகழரைய
நன்னுடன் செம்மை யாய
ஏர்மலிசீர்ப் புகழ்வேளாண் குலன்கூர
கோத்திரத்தான் இசைமை மேவும்
ராமசா மிப்பெரியோன் அங்கம்மை
செய்தவத்தின் நல்கு மைந்தன்

வளம்பெருகு வேலனகர் வாழ்வுபெறும்
தாளாளன் மதியின் மேன்மை
உளமருவு சின்னத்தம் பிப்பூபன்
வளர்த்தெடுத்த உவகைப் பேரன்
களமருவு செந்தமிழ்நூற் கலையுணர்ந்த
பெரும்புலவன் கற்பிப் போனுல்
இளமையிலே கவிபாடி உரையியற்றி
ஏடுபல உணரும் சீலன்

சரிதநூல் உணரறிஞன் பழஞ்சுவடி
யச்சேற்றித் தந்த மேலோன்
திருநீறும் அஞ்செழுத்தும் சிவனடியும்
மறவாத சிந்தை யன்பன்
திருமலியும் சென்னிமலை யாண்டவனுர்
சேவடிக்கே செவ்வி மிக்க
அருமைமிகும் சுவையாற்றுப் படையென்னும்
பாமாலை யணிந்தான் தானே.

திருப்பேர்தான் தெய்வசிகா மணியென்று
தமிழுலகம் செப்பும் சீரோன்
விருப்பமொடு பணிமொழியும் நல்லொழுக்கும்
உயர்பண்பும் விளங்கும் மேலோன்
பொருப்பகழ்ந்த சிவகிரிவே லாயுதனுர்
திருவருளால் பொலிந்து வாழ்க !
அருட்பெருகு தமிழ்த்தாயின் அடிக்கிதுபோல்
பல்பணியும் அணிந்து வாழி.

## வெண்பா.

சென்னிமலை யாண்டவனுர் செவ்வேள் திருவடிக்குப்
பன்னுசுவை யாற்றுப் படைத்தமிழ்நூல்—நன்மைமிகத்
தேற்றியுயர் தெய்வ சிகாமணியாம் சீர்க்கவிஞன்
சாற்றினுன் வாழி தழைத்து.



உ

முருகன் துணை.

# புலவராற்றுப்படை.

(ஆராய்ச்சிக் கட்டுரை)



"நீல நெடுங்கொண்மூ நெற்றி நிழலுறிக்
காலை யிருள்சீக்குங் காய்கதிர்போற்—கோல
மணித்தோகை மேற்றோன்றி மாக்கடற் சூர்வென்றோன்
அணிச்சே வடியெம் மரண்." – இரும்பல் காஞ்சி.

சென்னிமலை முருகன் புலவராற்றுப்படைக்கு முகவுரை எழுதிக்கொண்டிருக்கும்பொழுது புலவராற்றுப்படையைத் தன்னகத்துக் கொண்ட அறுமுறை வாழ்த்துப்பற்றிய சில சிந்தனைகள் என்னுள்ளத்தில் தோன்றின. அவை இக் கட்டுரையில் வெளியிடப்படுகின்றன. வந்தது கொண்டு வராதது முடித்தல் என்பது தந்திர வுத்தியாகலின்.

வாழ்த்து; கடவுள் வாழ்த்து, மக்கள் வாழ்த்து, அமரர் வாழ்த்து என மூவகையாம். அவற்றுள் ஒன்றாகிய அமரர் வாழ்த்து அறுவகையினவாதலின் அறுமுறை வாழ்த்தெனப் பெயர் பெறும். "அமரர் கண்முடியு மறுவகை யான" என்று தொல்காப்பியமும்; "அமரர்கண் ணெனலா மறுமுறை வாழ்த்தே" என மாறனலங்காரமும் கூறுதலா னறிக.

புறப்பொருள் வெண்பா மாலையிற் கூறும் கொடிநிலை, கந்தழி, வள்ளி, புலவராற்றுப்படை, புகழ்தல், பரவல் என்னும் ஆறும் தொல்காப்பிய மூலத்திலும் சிறிது முறை மாறிக் கூறப் பெற்றுள்ளன. அவை பரவல், புகழ்ச்சி, குறிப்பு, கொடிநிலை, கந்தழி, வள்ளி என்பனவாம்.

"வழங்கியன் மருங்கின் வகைபட நிலைஇப்
பரவலும் புகழ்ச்சியுங் கருதிய பாங்கினும்
முன்னோர் கூறிய குறிப்பினும் செந்துறை
வண்ணப் பகுதி வரைவின் றாங்கே."

– தொல்காப்பியம் புறத்திணையியல் 27.

"கொடிநிலை கந்தழி வள்ளி யென்ற
வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றுங்
கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே"

– தொல்காப்பியம் புறத்திணையியல் 33.

வீரசோழிய இலக்கண நூலாசிரியர் புறத்திணையில் பாடாண் பகுதிக்குச் சிறந்தனவாக இவ்வாறினையுமே கூறுகின்றார்.

"புகழ்ச்சி பரவல் குறிப்புக் கொடிநிலை கந்தழியே
யிகழ்ச்சி மலிவள்ளி யென்றிவை யாறு நெறிமுறையிற்
றிகழ்ச்சி மலிதரு பாடாண் பகுதிசெப் பாதனவும்
இகழ்ச்சியுண் டாகா வகைதேர்ந் தறித லியல்புடைத்தே"

- வீரசோழியம் பொருட்படலம் 2.

மேற்குறித்த தொல்காப்பிய சூத்திரங்களிலும் வீரசோழியப் பாடலிலும் "புலவராற்றுப்படை" கூறவில்லையே? "குறிப்பு" என்பதொன்றன்றோ கூறப்படுகிறது? எனிற் கூறுதும். தொல்காப்பிய சூத்திரம் குறித்த "குறிப்பு" என்பது புலவராற்றுப்படையாம். இளம்பூரணவடிகள் "அமரர்கண் முடியும் அறுவகையானும்" என்பதற்கு உரை கூறுமிடத்து குறிப்பு என்பதற்குப் புலவராற்றுப்படை என்று பொருள் கூறுகிறார். அதற்கு உதாரணம் காட்டுமிடத்துப் புறப்பொருள் வெண்பா மாலையில் புலவராற்றுப் படைக்கு உதாரணமாகப் பாடியுள்ள,

"வெறிகொ ளறையருவி வேங்கடத்துச் செல்லின்
நெறிகொள் படிவத்தோய் நீயும்—பொறிகட்
கிருளீயு ஞாலத் திடரெல்லா நீங்க
வருளீயு மாழி யவன்."

என்னும் வெண்பாவை உதாரணங் காட்டுதலானும் அறிக. மற்றும் வீரசோழிய வுரையாசிரியராகிய பெருந்தேவனார் என்பவர் "குறிப்பாவது நன்மை வேண்டிற் றெய்வத்தை வழிபடு மென்பது" எனவுங் கூறினர்.

குறிப்பு என்பது புலவன் தான் மனத்திற் குறித்த பொருளைக் குறிப்பினாலறிந்து வழங்கும் தெய்வத்தை வழிபட்டுக் குறித்தபடியே பெறுதலாற் குறிப்பாயிற்று.

புலவராற்றுப்படை யென்பது பரிசில் பெற்ற புலவன் பரிசில் வேண்டி வந்த புலவனுடைய வறுமை நிலையை அவனுடைய முகம், கண் முதலியவற்றின் குறிப்பினுல் அறிந்து கொண்டு நீயும் எனக்குக் குறிப்பறிந்து நல்கிய தெய்வத்தின்பாற் சென்று குறித்தபடியே பரிசில் பெறுகவெனக் கூறித் தெய்வத்தின்பால் வழிப்படுத்துவது கூறலின் புலவராற்றுப்படையாயிற்று.

எனவே குறிப்பு என்பதும் புலவராற்றுப்படை யென்பதும் சொல்லால் வேறுபடினும் பொருளால் ஒன்ரும் என்பது காண்க. ஐயனரிதனுர் வழிநூல் செய்தனராகலின் முன்னேர் நூலின் சிறிது வேறுபாடு கூறுதல் முறையாகலின் குறிப்பு என்பதனை அதன் பரியாயச் சொல்லாகிய புலவராற்றுப்படை என்ற சொல்லாற் கூறினுர்.

இதனைப் புலவனெருவன் எதிர்வந்த புலவனெருவனை முருகக் கடவுள்பால் ஆற்றுப்படுத்தியதாகக் கூறும் முருகாற்றுப்படையினும் காண்க.

''புரையுந ரில்லாப் புலமை யோயெனக்
குறித்தது மொழியா வளவையிற் குறித்துடன்''

– முருகாற்றுப்படை 280, 281.

''ஒருநீ யாகித் தோன்றி விழுமிய
பெறலரும் பரிசில் நல்குமதி''

- முருகாற்றுப்படை 294, 295.

தொல்காப்பியனுர் அறுமுறை வாழ்த்து ஆறினையும் ஒன்ருக வைத்துச் சூத்திரம் செய்யாது; பரவல், புகழ்தல், குறிப்பு என்ற மூன்றையும் ஒன்ருக வைத்துத் தனிச் சூத்திரமாகவும், கொடிநிலை, கந்தழி, வள்ளி என்ற மூன்றையும் ஒன்ருக வைத்து வேறு தனிச் சூத்திரமாகவும் செய்திருப்பதற்குக் காரணமென்னெனிற் கூறுதும்.

பரவல் முதலிய மூன்றும் அமரரை வாழ்த்துதற்குரிய மூவகை நெறிகளாமாதலின் அவற்றைத் தனியே வைத்தும்; கொடிநிலை முதலிய மூன்றும் கடவுளைச் சார்ந்து வழங்கும் அமரத் தன்மையுடைய பொருள்களாமாதலின் அவற்றைத் தனியே வைத்தும் சூத்திரம் செய்தார்.

வாழ்த்து நெறிகள் மூன்றும், வாழ்த்துதற்குரிய பொருள்கள் மூன்றும் ஆகிய ஆறனையும் சேர்த்து அறுமுறை வாழ்த்தெனல் மரபாம்.

இனி இவற்றின் பொருள்பற்றிக் கூறுவாம்.

1. "கொடிநிலை :- அரன், அரி, அயன் என்னும் மூவர் கொடியுள் ஒன்றுடன் உவமித்துத் தன் அரசனுடைய கொடியைப் புகழ்தல்.

2. கந்தழி :- திருமாலானவர் வாணாசுரனுக்குரிய சோ வென்னும் மதிலின் வலியை அழித்ததைக் கூறுவது.

3. வள்ளி :- பெண்டிர் வேல் முருகனுக்கு வெறிக் கூத் தாடுவது.

4. புலவராற்றுப்படை :- தேவரிடத்துப் பெரும்புலவனை வழிப்படுத்துவது.

5. பரவல் :- இன்ன பொருளை எய்துவமெனத் தெய்வத்தை முன்னிலையில் புகழ்வது.

6. புகழ்தல் :- பயன்பெறுதலின் பொருட்டு வானவனைப் படர்க்கையில் புகழ்வது."

– புறப்பொருள் வெண்பாமாலை.

இப் பொருள்களையே பழைய தமிழ் நெறி பற்றிய பொருள் களாகக் கருதுவர் தமிழ்மரபு பற்றியொழுகும் ஆன்றோர்கள்.

அறுமுறை வாழ்த்தில் வரும் கொடிநிலை முதலிய முதல் மூன்று பொருள்கட்கும் உரையாசிரியர்கள் வெவ் வேறு வகையான பொருள் கொண்டனர். வீரசோழிய உரையாசிரியர் பெருந்தேவனார் "கொடியாவது கொடியது தன்மை கூறுவது. கந்தழியாவது செருவிற்றிட்பமுடைமை. வள்ளியாவது முருகவேளைக் குறித்தது பிறவுமன்ன—என வுரை கூறினர். வள்ளியாவது முருகவேளைக் குறித்தது பிறவு மன்ன என்பதனால் ஏனைய பரவல் முதலிய ஐந்தும் முருகனுக்குரியன வென்பது பெருந்தேவனார் கருத்தெனத் தெரிகின்றது. அறுமுறை வாழ்த்து முருகனுக்குரியதாதல்

பற்றியே ஆசிரியர் நக்கீரனார் அவ்வாறனுள் ஒன்றாகிய குறிப்பு என்னும் புலவராற்றுப்படையை முருகக் கடவுளுக்குப் பாடினார் என்பது தெள்ளிதிற் புலனாகும்.

தொல்காப்பிய உரையாசிரியர் நச்சினார்க்கினியர் ஒருவர் மட்டும் முற்கூறிய நூலாசிரியர் உரையாசிரியர்களின் வேறுபட்டு அறுமுறை வாழ்த்துக் கூறினர். இவர் தொல்காப்பியப் புறத்திணையியல் 26-ஆம் சூத்திர வுரையில், ''அவை முனிவரும் பார்ப்பாரும் ஆனிரையும் மழையும் வேந்தரும் உலகமுமாம்''—என்பர். இவர் கூறும் அறுமுறை வாழ்த்துப் பொருளுக்குப் பழைய தமிழ் நூல்களில் யாண்டும் ஆதாரம் காண்கிலேம். மேலும் கொடிநிலை, கந்தழி, வள்ளி என்ற மூன்றும் தெய்வங்களென்றும்; அவை அறுமுறை வாழ்த்தின் வேறாகக் கடவுள் வாழ்த்துடன் வருமென்றும் கூறுகின்றார். இவர் கொள்கையை மேற்கொண்டு பிற்காலத்தில் அறுமுறை வாழ்த்துச் சூத்திரம் செய்தாரும் உளர். அவர் மாறனலங்கார ஆசிரியர் திருக்குருகைப் பெருமாள் கவிராயர் ஆவார்.

நச்சினார்க்கினியர் ''கொடிநிலை'' என்று தொடங்கும் அறுமுறை வாழ்த்துப் பற்றிய தொல்காப்பியம் புறத்திணையியல் 27-ஆம் சூத்திரவுரையில்,

''கொடிநிலை—கீழ்த்திசைக்கண்ணே நிலைபெற்றுத் தோன்றும் வெஞ்சுடர் மண்டிலம்.

கந்தழி—ஒரு பற்றுக்கோடுமின்றி அருவாகித் தானே நிற்கும் தத்துவங் கடந்த பொருள்.

வள்ளி—தண்கதிர் மண்டிலம்; என்ற வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்—என்று சொல்லப்பட்ட குற்றந் தீர்ந்த சிறப்பினையுடைய முற்கூறப்பட்ட மூன்று தெய்வமும்; கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே—முற்கூறிய அமரரோடே கருதுமாற்றால் தோன்றுமென்றவாறு''-எனவுரைத்தார்.

நச்சினார்க்கினியர் ''அமரர்கண் முடியும்'' — என்னும் தொல்காப்பியப் புறத்திணையியல் 26-ஆம் சூத்திரவுரையில், ''அவை முனிவரும் பார்ப்பாரும் ஆனிரையும் மழையும் முடியுடை மூவேந்தரும் உலகுமாம்'' —என அறுமுறை

வாழ்த்துக் கூறினர். மேற்கூறிய 27-ஆம் சூத்திரவுரையில் முற்கூறப்பட்ட மூன்று தெய்வமும் என்று கூறுகின்ருர். முன் என்பது எந்த முன்? முன்னுள்ள 26-ஆம் சூத்திரத் தைக் குறிக்கின்ருரா? முற் சூத்திரத்தைக் குறித்தாராயின் அச்சூத்திரவுரையில் முனிவர் முதலாயின பொருள்களன்ருே அறுமுறை வாழ்த்துப் பொருள்களாக அமைந்திருப்பதாகக் கூறுகின்ருர். கொடிநிலை முதலிய மூன்றும் அமைவதெங் ஙனம்? அச் சூத்திரத்திற் கூறும் பொருளே முன் கூறப்பட்ட என்று கூறுவானேன்? அச் சூத்திரத்தின் பின்பு வேறு பொருள்கள் கூறினுலன்ருே முற் கூறப்பட்ட என்று கூற வேண்டும்? கடவுள் வாழ்த்தொடு என்பதற்கு அமரரோடே என்று உரை எழுதினர். கடவுள் வேறு அமரர் வேறு. கடவுள் ஒருமை. அமரர் பன்மை. கடவுள் தத்துவங் கடந்த தனிப் பரம்பொருள். அமரரென்போர் புண்ணிய முதிர்ச்சியால் கடவுளின் சம்பந்தம் பெற்று நீண்ட வாழ் நாள் பெற்று புண்ணிய முடிவில் உயிர் துறப்போர். உபசா ரத்தால் அமரரெனப் பெற்றனர்.

கடவுள் என்பதற்கு அமரர் என்று பொருள் கூறியது எங்ஙனம் பொருந்தும்? கடவுள் வாழ்த்தோடு கண்ணியவ ரும் மூன்று பொருள்களில் ஒன்ருய் வரும் கந்தழி என்பதே ஒரு பற்றுக் கோடுமின்றி அருவாகித் தானே நிற்கும் தத்துவங் கடந்த பொருள் என்று உரை கூறினர். கடவுள் என்பதே ஒரு பற்றுக் கோடுமின்றித் தத்துவங் கடந்த பொருளாயிருக்க அப்பொருளேயுடைய கந்தழியைக் கடவுளுடன் வைத்து வேறு கூறுவானேன்? என்பன முத லாகப் பல ஆட்சேபங்கள் இவருரையில் எழுகின்றன. மற்றும் கொடிநிலை முதலியவற்றிற்கு இவர் கூறும் பொருள் கள் அனைத்தும் தாமாகவே வலிந்து படைத்த பொருள் களின்றி முன்னூல்களிற் கூறும் இயற்கை நெறியானமைந்த பொருள்களுடன் இயைபுடையனவுமன்று என்பது ஆராய் வார்க்குப் புலனுகாமற் போகாது

"கொடிநிலை" என்னும் இச் சூத்திரத்திற்கு இளம்பூர ணர் கூறும் உரையை நோக்குவோம். "வடுநீங்கு சிறப்பின் கொடிநிலை, கந்தழி வள்ளிஎன்ற மூன்றும்—குற்றந் தீர்ந்த சிறப்பினையுடைய கொடிநிலை முதலாகச் சொல்லப்பட்ட முற்பட்ட மூன்றும்; கடவுள் வாழ்த்தொடு கண்ணியவரும்— (பாட்டுடைத் தலைமகனைச் சார்ந்து வருங்காலத்து) கடவுள்

வாழ்த்தொடு பொருந்தி வரும்.''—என்பது இளம்பூரணர் உரை.

கடவுள் வாழ்த்துடன் பொருந்தி வரும் பொருள்கள் மூன்றும் கொடிநிலை முதலாகக் கொண்டு வருவனவாகலின் கொடிநிலை முதலாகச் சொல்லப்பட்ட மூன்றும் என்றும்; அறுமுறை வாழ்த்துப் பொருள்களாகிய கொடிநிலை, கந்தழி, வள்ளி, புலவராற்றுப்படை, பரவல், புகழ்தல், என்னும் ஆறனுள் கொடிநிலை முதலிய மூன்றும் முதல் மூன்று பொருள்களாதலின் முற்பட்ட மூன்றும் என்று தெளிவாக அறியும்படி உரையெழுதியுள்ளனர். அறுமுறை வாழ்த்துப் பொருள்கள் ஆறனுள் முதன்மை யுடையன கொடிநிலை முதலிய மூன்றுமாகலின் முற்பட்ட என்றூர் எனினுமாம். கடவுள் வாழ்த்தோடு அமரர் வகையைச் சார்ந்தனவாகக் கூறும் மூன்று பொருள்கள் பொருந்தி வருதல் கூறுகின்றது இச்சூத்திரமாகையினுல் ''மூன்றும் கடவுள் வாழ்த்தொடு பொருந்தியவரும்''—என்று உரைத்த வுரையும் ஐயத்திற்கிடமின்றித் தெளிவாக உள்ளது.

இளம்பூரணர் கூறும் அறுமுறை வாழ்த்திற்குரிய பொருள்கள் மூன்றும் தொல்காப்பியம், புறப்பொருள் வெண்பாமாலை, வீரசோழியம் என்னும் மிகவும் பழமை யாகிய இலக்கண நூல்களிற் கூறப்பெற்றுள்ளன.

புறப்பொருள் வெண்பாமாலை ஆசிரியர் கொடிநிலை மூவருளொருவர் கொடியையும், கந்தழி என்பது திருமால் மதிலின் வலியை யழித்ததையும், வள்ளி என்பது முருகனுக்கு வெறியாடுவதையும் தனித்தனியாய்க் குறிப்பதாகக் கூறின ரேனும் இம்மூன்றும் சிறப்பாக முருகக் கடவுளுக்குரிய கொடி, வலிமை, வள்ளி யாகியவற்றைக் குறிப்பதாய்க் கொள்வதே இயைபுடையதாகும். அங்ஙனம் கூறுமிடத்துக் கடவுள் என்றது முருகக் கடவுளும்; அமரர் கண்ணவாகிய மூன்று பொருள்கள் என்றது அவரது கொடியும், கந்தழியும், வள்ளியுமாகிய மூன்று பொருள்களுமாம் என்று கொள்ளு வதே சிறப்புடையதாம்.

கொடிநிலை, கந்தழி, வள்ளி என்ற மூன்றனுள் வள்ளி என்பது முருகனுக்குரியது என்பது யாவரும் அறிந்ததே யாகலின் அதனின் முற்கூறிய கொடிநிலை கந்தழிகளும்

முருகனுக்குரியனவாகக் கொள்ளுதல் சிறப்புடையதாம். அவ்வாறே பிற்கூறிய புலவராற்றுப்படை, பரவல், புகழ்தல் என்பவைகளும் முருகக்கடவுளுக்குச் சிறப்பாக உரிமையுடையனவாகக் கோடல் வேண்டும். மற்றும் யாம் இவ்வாறு கொள்வதற்கு ஆதாரமாயிருப்பது "வள்ளியாவது முருகக் கடவுளைக் குறித்தது; பிறவுமன்ன" என்று வீரசோழிய வுரையாசிரியர் கூறியதுமாம். அவ்வுரையில் "பிறவுமன்ன" என்பது கொடிநிலை முதலாகிய ஐந்தும் முருகனைக் குறித்தன வென்பதாம். ஆறு என்ற எண்ணிற்குச் சிறப்பாகஉரியவர் முருகக் கடவுளே. அவர் ஆறு குணங்களும் ஆறு திருமுகமும் ஆறெழுத்து மந்திரமும் அறுகோணச் சக்கரமும் ஆறுபடை வீடும் ஆறுவது திதியும் ஆறு தாயரும் உடையவர். ஆதலின் ஆறுவகையாகக் கூறும் அறுமுறை வாழ்த்தும் அவர்க்கே சிறப்பாக உரியதாகும்.

இனி அறுமுறை வாழ்த்து முருகக் கடவுளுக்கு இயைபுறுமாறு காட்டுதும்.

1. **கொடிநிலை:-** முருகனுக்குரிய கோழியாகிய பறவையின் உருவம் தீட்டப்பெற்ற கொடி நிற்றலையுடைய கம்பமாம்.

"புள்ளணி நீள்கொடிப் புணர்நிலைத் தோன்றும்"
- சிலம்பு, காடுகாண் காதை 136.

"கோழி யோங்கிய வென்றடு விறற்கொடி
வாழிய பெரிதென் றேத்தி" -திருமுருகாற்றுப்படை 38,39.

கொடி முருகனுக்குரிய மயிற் கொடி யெனினுமாம்.

"மணிமயி லுயரிய மாறா வென்றிப்
பிணிமுக வூர்தி யொண்செய் யோனும்" – புறநானூறு 56.

"நீலமணி போலும் நிறத்தையுடைய மயிற் கொடியை எடுத்த மாறாத வெற்றியையுடைய அம்மயிலாகிய ஊர்தியையுடைய ஒள்ளிய செய்யோனும்"
- புறநானூறு 56 பழைய வுரை.

"பல்பொறி மஞ்ஞை வெல்கொடி யகவ"
- திருமுருகாற்றுப்படை 122.

"மணிமுக மஞ்ஞை யோங்கிய புட்கொடிப்
பிணிமுக மூர்ந்த வெல்போ ரிறைவ!" – பரிபாடல் 17.

பிணிமுகம்—மயில், மயிலினது உறுப்புக்களில் மிகவும் அழகற்றது முகம். நோய் பிணித்தாற் போன்ற முகமுடைமையால் மயிலுக்குப் பிணிமுகம் என்ற பெயராயிற்று.

2. **கந்தழி :-** தூணின் வலிமையை யழித்து விளங்கும் முருகனது ஊர்தியாகிய பிணிமுகமென்னும் யானை. கந்தழி—கந்தை அழிக்கின்ற யானையென்பது வேற்றுமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகைக் காரணப் பெயராம்.

யானையைத் தூணிற் கட்டுவர் என்பதும் அது தூணின் வலிமையை யழித்து விளங்குமென்பதும் யாவரும் அறிந்ததே.

"கந்திற் பிணிப்பர் களிற்றை" - நான்மணிக்கடிகை.

"கந்தடு களிமத யானை மன்னவன்
இந்திர னெனுந்திற லசோக னென்றுளன்"

முருகனுக்கு யானை வாகனமுண்டென்பதை

"சூருடை முழுமுதல் தடிந்த பேரிசைக்
கடுஞ்சின விறல்வேள் களிறூர்ந் தாங்கு"
— பதிற்றுப் பத்து 11.

முருகனூர்தியாகிய யானைக்குப் பிணிமுகம் என்று பெயர் என்பதை,

"சேயுயர் பிணிமுக மூர்ந்தம ருழக்கி" — பரிபாடல் 5-2.

"சேயுயர்—மிகவுமுயர்ந்த, பிணிமுகம்—முருகக் கடவுளுக்குரித்தாகிய யானை" — பரிபாடல் 5-2-பரிமேலழகருரை.

பிணிமுகம்—யானை, நெற்றிப் பட்டமென்னும் அணிகலனாற் சிறந்து விளங்கும் முகத்தினையுடையது யானை.

"ஓடாப் பூட்கைப் பிணிமுகம் வாழ்த்தி"
— முருகாற்றுப்படை - 247.

"கெடாத வலிமையினையுடைய பிணிமுகம் என்னும் பட்டத்தினையுடைய யானையை வாழ்த்தி, பிணிமுகம் மயில் எனினுமாம்"
— முருகு - 247 - நச்சினார்க்கினியர் உரை.

3. வள்ளி:- முருகனது தேவியாகிய வ ள் ளி. இ வ ள் முருகனுக்கு மிகவும் உரிமையுடையவள்.

> "அக்களவிற் புணர்ச்சி யுடைமையால் வள்ளி சிறந்தவாறும் கூறுகின்றார்" — என்பது பரிபாடல் 9 – பரிமேலழகர் உரை.

முருகன் தம் தேவியர்களில் வள்ளியை மிகவும் விரும்பு கிறவன்.

> "அறுமுகத் தாறிரு தோளால் வென்றி
> நறுமலர் வள்ளிப் பூநயந் தோயே" — பரிபாடல் 14.

4. புலவராற்றுப்படை:- புலவன் ஒருவன் புலவனொருவனை; புலவனாகிய முருகனை வா ழ் த் தி அவன்பால் ஆற்றுப் படுத்துவது. புலவன் எ ன் ப து முருகனுக்குப் பெயர். புலவராற்றுப்படை படர்க்கையும் முன்னிலையுமாகிய புகழ்தல், பரவல் என்னும் இ ர ண் டு வகையாலும் மு ரு க ன து புகழ் கூறுவது. பு ல வ ன் எதிர்வந்த புலவனுக்குப் படர்க்கையாக மு ரு க ன் புகழ் கூறிப் பின்னர் முன்னிலையாகத் துதிக்குமாறு கூறுதல் திருமுரு காற்றுப்படை முதலியவற்றானுணர்க.

> "உலவா வூக்கமோ டுன்னியது முடிக்கும்
> புலவ ராற்றுப்படை புத்தேட்கு முரித்தே"
> — புறப்பொருள் வெண்பாமாலை மேற்கோட் சூத்திரம்.

புத்தேள் — கடவுள்.

5. பரவல்:- முருகனை முன்னிலையாகப் புகழ்தல்.

> "குறமக ளவளெம குலமக ளவளொடும்
> அறுமுக வொருவநின் னடியிணை தொழுதேம்
> துறைமிசை நினதிரு திருவடி தொடுநர்
> பெறுகநன் மணம்விடு பிழைமண மெனவே"
> — சிலம்பு — குன்றக் குரவை.

6. புகழ்தல்:- முருகனைப் படர்க்கையாக்கிப் புகழ்தல்.

> "அணிமுகங் களோராறு மீரா றுகையு
> மிணையின்றித் தானுடையா னேந்திய வேலன்றே
> பிணிமுகமேற் கொண்டவுணர் பீடழியும் வண்ணம்
> மணிவிசும்பிற் கோனேத்த மாறட்ட வெள்வேலே"
> சிலம்பு — குன்றக் குரவை.

இக் கட்டுரையாலறிதற்குரிய பொருள்களாவன வாழ்த்து மூவகைப்படும் என்பதும் அவற்றுள் ஒன்ருகிய அறுமுறை வாழ்த்து கொடிநிலே, கந்தழி, வள்ளி, புலவ ராற்றுப்படை, பரவல், புகழ்தல் என்னும் ஆறுமாம் என்பதும் அவற்றுள் கொடிநிலே முதலிய மூன்றும் வாழ்த்து தற்குரிய பொருள்களாமென்பதும் பரவல் முதலிய மூன்றும் வாழ்த்துதற்குரிய நெறிகளாமென்பதும் இவ் வறுமுறை வாழ்த்துப் பொதுவாகத் தேவர்கள் எல்லோருக்கும் கொள்ளப்படினும் சிறப்பாக முருகக் கடவுளின் கொடி முதலியவற்றிற் குரியன வென்பதுமாம்.





## குறிப்புரையில் மேற்கோள் காட்டப்பட்ட நூல்கள்



1. அணியியல் விளக்கம்.
2. இலக்கண விளக்கப் பாட்டியல்.
3. ஔவையார் பாடல்.
4. கந்தர் கலிவெண்பா.
5. குறுந்தொகை.
6. கொங்குமண்டல சதகம்.
7. கௌமார முறைமை.
8. சிதம்பர மும்மணிக் கோவை.
9. சிதம்பரப் பாட்டியல்.
10. சிலப்பதிகாரம்.
11. சிற்றகத்தியம்.
12. சீகாளத்திப் புராணம்.
13. தணிகைப் புராணம்.
14. தணிகாசலப் புராணம்.
15, தனிப்பாடல்.
16. திருவாசகம்.
17. திருக்குறள்.
18. திருமுருகாற்றுப் படை.
19. தொல்காப்பியம்.
20. நாலடியார்.
21. பன்னிரு பாட்டியல்.
22. புறநானூறு.
23. மன்மதன் பிரதாபாலங்காரக் கொத்து.
24. மேழி விளக்கம்
25. ஸ்ரீ தத்வ நிதி.



உ



சென்னிமலையாண்டவன் துணை.

# சென்னிமலை முருகன்
## புலவராற்றுப் படை.

### காப்பு.

கட்டளைக் கலித்துறை.

தேர்கொண்ட சென்னி மலைவேலர் பாதந் தினந்துதித்துப்
பார்கொண்ட செந்தமி ழாற்றுப் படையினைப் பாடுதற்குத்
தார்கொண்ட கொன்றைச் சடையான் குமாரன் தலத்துரியான்
கார்கொண்ட மும்மதச் சந்தி விநாயகன் காப்பெமக்கே.

### நூல்.

பரிசில் பெற்று மீண்ட புலவன்
பரிசில் வேண்டி வரும் புலவனை நோக்கிக் கூறுதல் :-

### புலமைத் திறம்.

மணிவளர் கடல்சூழ் மாநில வளாகத்
தணிவளர் சாந்த மருந்தமிழ் தென்றல்
மணமிகும் பாண்டி மகள்திரு முகமாம்
பொன்றிகழ் கமலப் பொய்கையங் கோட்டுத்
தன்னிக ரமுதத் தண்மதி தழீஇய
மாட மோங்கிய மலிபுகழ்க் கூடலிற்

---

1. மணி—முத்து; மங்கலச் சொல். வளாகம்—உலகம்.
''தெண்கடல் வளாகம் பொதுமை யின்றி''-புறநானூறு 189.
''நாமநீர் வைப்பின் நானில வளாகமும்''-சிதம்பர மும்மணிக் கோவை

3. பாண்டிமகள்—பாண்டிய நாடாகிய பெண், உருவகம்.

4. அம்கோடு—அழகிய கரை.

பாடல் சான்ற பளகறு சிறப்பின்
பிறைமுடி யணிந்த கறைகெழு மிடற்றோன்
ஆல வாயின் அவிர்சடைக் கடவுள்
தலைவ னாகத் தன்னுடன் குழீஇய
புலவரே ழெழுவரும் புலமுற வாய்ந்த

தேனுறை சங்கத் தீந்தமிழ் நூலாம்
பழந்தமிழ் நாட்டின் பண்பும் வளமும்
இயல்வர லாறு மெழில்பெறக் காட்டிச்
சேய்நோக் காடியிற் றிகழ்தரு கின்ற
பத்துப் பாட்டும் எட்டுத் தொகையும்

---

6. பளகறு—குற்றமற்ற.

7. கறைகெழு—விடம் பொருந்திய, மிடற்றோன்—கண்டத்தினையுடைய சிவபிரான். 8. ஆலவாய்—மதுரை. 9. குழீஇய—கூடிய.

10. புலவர் ஏழெழுவர்—சங்கப் புலவர் நாற்பத்தொன்பதின்மர்.

14. சேய் நோக்கு ஆடி இல்—தூரதிருஷ்டிக் கண்ணாடி போல.

15. பத்துப் பாட்டு—நூறடி சிறுமையாக நூற்றுப்பத்தும் நூற்றுப்பத்தின் மிக்கனவுமாகிய அடிகளாற் பத்துப் பாட்டுப் பாடப் படுவது பத்துப் பாட்டாம். அவை கடைச் சங்கத்தார் தொகுத்த திருமுருகாற்றுப் படை முதலிய பத்து நூல்களாம்.

“முருகு பொருநாறு பாணிரண்டு முல்லை
பெருகு வளமதுரைக் காஞ்சி—மருவினிய
கோலநெடு நல்வாடை கோல்குறிஞ்சி பட்டினப்
பாலை கடாத்தொடும் பத்து.

எட்டுத் தொகை—தொழில் அளவு பாட்டு பொருள் ஆகியவற்றில் ஒவ்வொன்றால் தொகுக்கப்பட்ட எட்டு நூல்களின் தொகையாம். அவை நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறு நூறு, பதிற்றுப் பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு என்பனவாம்.

“நற்றிணை நல்ல குறுந்தொகை ஐங்குறுநூ
றொத்த பதிற்றுப்பத் தோங்கு பரிபாடல்
கற்றறிந்தா ரேத்துங் கலியோ டகம்புறமென்
றித்திறத்த வெட்டுத் தொகை ”

செய்வதுந் தவிர்வதுந் தெரிவுறக் கூறும்
நாலடி முதலா நற்கீழ்க் கணக்கும்
எழுத்துச் சொற்பொருள் யாப்பணி யென்னும்
ஒல்காப் பொருள்மிகு தொல்காப் பியத்தொ
டறுபது சூத்திரத் தன்பினைந் திணையும்
ஐங்கா வியங்களு மறிவுறப் பயின்று
பெருவிளை யாடற் றிருவிளை யாடலும்
தெய்வ மணக்குஞ் செய்யுள்க டோறும்
அரிய பொருண்மிகு பெரிய புராணமும்
நச்சிய பொருள்சேர் நளினமிக் குடைய
கச்சியப் பன்செய் கந்தபு ராணமும்
இம்ப ருலகிற் கின்சுவை யமுதாங்
கம்பர்செய் நூலுங் களியுறப் பயின்று
முத்தி யளிக்கு மூவர்தே வார
முதற்றிரு முறையு முரணிலா ஞானச்

---

17. கீழ்க் கணக்கு—அடியளவிற் குறைந்தனவாயிருக்கும் வெண்பாவின் தொகுதியால் அறம் பொருள் இன்பம் என்னும் பொருள்களையடுக்கித் திறம்பெறச் சொல்லுவதாம்.

அவை நாலடி முதலிய பதினெட்டு நூல்களாம்.

"நாலடி நான்மணி நானாற்ப தைந்திணைமுப்
பால்கடுகங் கோவை பழமொழி மாமூலம்
இன்னிலைய காஞ்சியோ டேலாதி யென்பவே
கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு."

20. அன்பினைந்திணை—இறையனூர் களவியல்.

21. ஐங்காவியம்—ஐம்பெருங் காப்பியங்கள். சிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி என்பன.

காவியம்—அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நாற்பொருள் பயப்ப ஒரு கதைமேற் செல்லும் கவிகளாலாகிய நூல். பெருங்காவியத்தைப் பெருஞ்செய்யுளென்றும் சிறுகாவியத்தைச் சிறுசெய்யுளென்றும் கூறுவர். காவிய வுறுப்புக்கள் பதினெட்டாம்.

"பெருஞ்செய் யுட்டிறம் பேசுங் காலை
நகர்கடன் மலைபரு வங்கதிர் மதிகளின்
றோற்றம் பொழில்விளை யாட்டுநீ ராட்டு
மதுவுண் டாட்டுப் புணர்ச்சி பிரிவு
மணமகப் பேறு சூட்சி தூது
செலவு பெருவென்றி மூவாறு முடைத்தே."
"அவைசில குறைந்துள தாஞ்சிறு செய்யுள்"
– அணியியல் விளக்கம்-செய்யுட் படலம் 50, 51.

27. இம்பருலகு—இந் நிலவுலகம்.

30. தேவார முதல் திருமுறை—தேவார முதலிய பன்னிரு திருமுறைகள்.

சந்தான குரவர் சாத்திர நூல்களும்
செந்தூர் முருகன் றிருவருட் பொலிவுடன்
பாண்டித் தமிழ்வளம் பழுனிக் கிடக்கும்
குமர குருபரன் கொழுந்தமிழ் நூல்களும்
கற்பனைக் களஞ்சியக் காவியப் புலவன்

சொற்புகழ் கொண்ட தூய்தவ மாமுனி
சிவப்பிர காசன் செழுந்தமிழ்ப் பனுவலும்
ஐயமுந் திரிபு மணுவுமில் லாமல்
தெளிவுறப் பயின்ற தீந்தமிழ்ப் புலவ!
பாற்கட லமுதம் பரவுதல் போல

நாற்பொருள் விராவு நற்காவி யச்செயுள்
பொழிப்பு மகலமும் புகலுறு நுட்பமும்
அறநூல் விதியு மதிலுறு விலக்கும்
உயர்ந்தோர் வழக்கு முறுநூல் வழக்கும்
வண்டமிழ் மரபும் வடநூன் மரபும்

முன்னுறு பழமையும் பின்வரு புதுமையும்
ஐந்திலக் கணத்தி னமைதியும் பயனும்
தோன்ற விரித்துச் சொற்பொரு ணயங்கள்
விளங்குற வேது மேற்கோள் காட்டிக்
கேட்டோர் மேலுங் கேட்குறு மாறு

அவைக்கள மேறி யாற்றொழுக் கேபோல்
விரிவுரை யாற்றும் மேன்மைசா லறிஞ!
நூலுரை போதகா சிரியரின் றிறங்கள்
மேலுறப் பெற்று விளங்கா சிரிய!
எல்லாப் பொருட்கு மியல்குண முணர்ந்த

---

31. சந்தான குரவர்—திருக்கைலாய மரபில் தோன்றிச் சைவ சாத்திரங் களைத் தமிழ் மொழியில் அருளிச் செய்த மெய்கண்டதேவர் முதலியோர். 33. பழுனிக் கிடக்கும்—பழுத்துக் கிடக்கும். பாண்டித் தமிழ்—பாண்டிய நாட்டுத் தமிழ். வளம்—அழகு. "பெட்டாங் கீயும் பெருவளம் பழுனி"–புறம் 113.

35. கற்பனை—இல்லாததொன்றை யுள்ளதாகக் கற்பித்துக் கூறுதல்.

49. ஏது—காரணம்

வல்லோர் குற்றம் வரும்வழிக் காட்டுவர்
வல்லோ ரறிந்து வழங்கிய குற்றம்
அல்லவென் றுரைப்ப ததுவே புலமை
என்றகத் தியனு ரியம்பின ராதலின்
சீர்மிகு மறிஞர்செய் செய்யுளிற் குற்றம்

ஆக்கிப் பின்ன ரலவெனக் கூறும்
வாதத் திறமை வளமுறப் பெற்ற
அகடித கடன வாற்றலு முடையாய்!
சேரஞ் சோழம் பாண்டிய மென்னும்
மூவகைச் செய்யுள் முறைநெறி கொண்டு

காவிளை யாடுங் கருங்குயி லனைய
தேனினு மினிய செஞ்சொற் கவிதை
நாலும் பாடி நானிலத் தறிஞர்

---

63. அகடித கடனம்—நூலிற்குக் கூறிய பத்துக் குற்றங்களையும் யாப்பின்கண் வரப்படுத்திக் குற்றம் தோற்றுவித்து; பின்பு குற்றத்தை நீக்கிக் கொள்ளச் செய்வது அகடித கடனமாம். இதற்கு அகடன கடனம் என்றும் பெயர். மாணிக்கவாசகத் தம்பிரான் செய்த குவலயானந்தம் சித்திரவியலில் இதன் விரிவு காண்க.

64. சேரநெறி—எளிதான செஞ்சொல்லும் புணர்ச்சியும் தொகையும் அமையப் பாடுவது.

''சேர நெறியினைச் செப்புங் காலை
புணர்ச்சி வன்மை சொல்வன்மை நெடுந்தொகை
எனுமிவை மூன்றின் இளமை யுடையதாம்''

சோழநெறி—விளக்கமும் ஒளியும் பொருந்திய சொல்லையும் புணர்ச்சி யையும் தொகையையும் கொண்டு விளங்குவது.

''சோழ நெறியினைச் சொல்லுங் காலை
விளக்கமு மொளியு மேவிய தாகும்.''

பாண்டியநெறி—முற்கூறிய இரண்டு நெறிகளும் அமையப்பாடுவது.

''பாண்டிய நெறியினைப் பகருங் காலை
முன்னவை யிரண்டின் தன்மைய தாகும்.''

— அணியியல் விளக்கம் செய்யுட் படலம் 22, 23, 24

68. கவிதை நான்கு—ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம்.

செய்யு ளின்பம் செவிவ்ழிப் பருகி
மகிழ்வுறக் கூறும் வாழ்வுசால் கவிஞ!

அகப்பாப் புறப்பா வாமிரு பாவில்
புறப்பா வதனிற் பொலிவுற விளங்கும்
கடவு ளமரர் கனம்பெறு மக்க
ளாகிய தலைவர்க் கமைந்துள சிறந்த
ஒளியு மாற்றலு மோம்பா வீகையும்

அளியு மென்றிவை யாய்ந்துறப் பாடும்
பாடாண் டிணையிற் பாவல் லோயே!
நில்லா வுலகில் நிலைபெறும் புகழ்செய்
மும்மணிக் கோவையும் நான்மணி மாலையும்

---

69. செய்யுளின்பம்—செய்யுட்களில் வரும் சொற்சுவை பொருட்சுவைக ளால் வருமின்பம். வழிமோனை முதலாயின வரத் தொடுப்பது சொற்சுவை. அறம் பொருள் இன்பம் வீடென்னும் பொருள் காரணமாக, மதுகரங்கட்கு மது காரணமாக வரும் மகிழ்ச்சி போலக் கேட்போர்க்கு வரும் இன்பம் பொருளின்பமாம்.

சுவையாவது சிருங்கார முதலாகவுடைய நாடகச் சுவையொன்பது மாமென்பர் வீரசோழிய வுரையாசிரியர்.

"அச்சுவை யுவகை நகையே யழுகை
வெகுளி பெருமித மச்ச மிளிவரல்
மருட்கை நடுநிலை யெனவொன் பதாகும்."

– அணியியல் விளக்கம்-சுவைப் படலம் 2.

71. அகப்பா—இன்பத்தைப் பொருளாகக் கொண்டு பாடும் பாடல்கள்

புறப்பா—அறத்தையும் பொருளையும் பற்றிப் பாடும் பாடல்கள்.

77. பாடாண்டிணை—பாடுதற்குரிய ஆண்மகனது ஒழுகலாறு.

79. மும்மணிக் கோவை—நேரிசையாசிரியப்பாவும் நேரிசை வெண்பாவும் கட்டளைக் கலித்துறையும் முறையாக முப்பதுபெற வடுக்கி அந்தாதித் தொடையாற் பாடுவது மும்மணிக் கோவையாம்.

"தோன்றிய அகவல் வெள்ளை கலித்துறை
மூன்றும் வருவது மும்மணிக் கோவை"

– பன்னிரு பாட்டியல் 108.

மங்கல முதலா மருவிய பொருத்தமும்
எழுத்தசை முதலாம் யாப்புறு விதியும்
சொற்பொரு ளணியுந் துலங்குற வளமாய்
இம்மெனு முன்னே இயற்றிடுந் திறலோய்!
பூவு மணமும் பொருந்துறல் போல
வியல்புறு மிலக்கண விலக்கிய மென்னுங்

---

நான்மணி மாலை—வெண்பாவும் கட்டளைக் கலித்துறையும் விருத்தமும் ஆசிரியப்பாவும் முறையாகப் பொருந்த அந்தாதித் தொடையால் நாற்பது செய்யுட் பாடுவது நான்மணி மாலையாம்.

"வெண்பாக் கலித்துறை விருத்த மகவல்
பின்பேசு மந்தாதியின் நாற்பது பெறினே
நான்மணிமாலை யாமென நவில்வர்"

- இலக்கண விளக்கப் பாட்டியல் 61.

80. மங்கல முதலாகிய பத்துப் பொருத்தங்கள்.

"பகர்செய்யுள் மங்கலச்சொல் லெழுத்துத் தானம்
பாலுண்டி வருணநாட் கதியே யென்றுப்
புகரில்கண மெனப்பத்தும் பிறங்கு கேள்விப்
புலவர் புகழ்முன் மொழிக்குப் புகல்வர்"

– சிதம்பரப் பாட்டியல் 6.

81. யாப்புறு விதி—எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை, பா, பாவினம் என்ற எட்டுமாம்.

82. சொற் பொருளணி—சொல்லணி பொருளணிகள். யமகம், திரிபு, பிராசம் முதலாகச் சொல் பற்றி வருவன சொல்லணிகளாம். உவமையணி முதலாகப் பொருள்பற்றி வரும் அணிகள் பொருளணிகளாம்.

85. இலக்கணம்—கருத்து; இலக்கியம்—அதனை விவரிக்கும் நெறி.

"இலக்கணம் கருத்தே இலக்கிய மதனெறி" – என்பது குவலயானந்தம். இவ்விரண்டும் பூவும் மணமும் போலத் தம்முள் இயைபுடையன. இலக்கு + இயம் = இலக்கியம்-மனத்திற்குறித்த பொருளைப் புலப்படுத்தும் சொற்கள். இலக்கு + அணம் = இலக்கணம்—இலக்கியத்தைத் தழுவி நிற்பது என்பது சொற்பொருள்.

"பூவினுள் வாசம் பொருந்துதல் போல
இலக்கண விலக்கிய மியைபுடைத் தாகும்"

– சிற்றகத்தியம்.

கலைக்கடல் கடந்துங் கலிக்கடல் கடக்கும்
வகையறி யாது மயங்கினை யந்தோ!

### புலவர் வறுமை.

மான முதலா மருவிய பத்தும்
பறந்திடச் செய்யும் பசிப்பிணி யதனால்
ஒட்டிய வயிற்றொ டுறுவிலா வென்பு
இருமருங் கினிலு மெழுந்துநிற் றலினால்
வங்கினைப் பற்றும் வல்லுடும் பதனை
யுரித்துவிட் டாற்போ லுடம்பினை யாயினை
கந்தை யுடையுங் கைதனிற் கிழிந்த
புத்தகக் காட்சியும் பொலிதர வந்தனை.

முத்தமிழ் சொரிதலின் மும்மத யானை
போன்ற புலவ! பூனைபோ லாயினை.
வெயில்படக் கிடந்த மென்மல ரதுபோல்
வாடினை மேனி வருந்தினை யந்தோ!
புலவர்தம் வறுமை பொல்லா தன்றோ?

---

86. கலைக் கடல்—கல்வியாகிய கடல்.

"கல்வி யென்னும் பல்கடற் பிழைத்து" – திருவாசகம்.

கலிக் கடல்—வறுமையாகிய கடல். கலி—வறுமைத் துன்பம்.

88. மானம் முதலா மருவிய பத்து :

"மானம் குலம்கல்வி வண்மை யறிவுடைமை
தானம் தவம்முயற்சி தாளாண்மை–தேனின்
கசிவந்த சொல்லியர்மேற் காமுறுதல் பத்தும்
பசிவந் திடப்பறந்து போம்" – ஔவையார்.

96. முத்தமிழ்—இயல், இசை, நாடகம். மும்மதம்—கன்னமதம், கபோலமதம், பீஜமதம்.

"மோனை முத்தமிழ் மும்மத முஞ்சொரி
யானை முன்வந் தெதிர்த்தவ னாரடா?" – தனிப்பாடல்.

காற்று மழையுங் கடுங்கதிர் வெயிலும்
ஒன்றுபி ஞென்ரு யுறுதுயர் செய்யும்
ஓட்டை மிகுந்த வோலையில் லத்தில்
வறுமைப் பேய்கொள வருத்தமுற் றயர்ந்து
தலைக்கிடு மெண்ணெய் தான்கா ணுமல்

மஞ்சள் பூசாது மதிமுக நுதலிற்
றிலக மிடாமல் திகழுற முன்பு
கட்டுநூற் கழுத்துங் கந்தைசூழ் இடையும்
உணவு காணும லொட்டிய வயிறும்
துயர்கூர் முகமுந் தோன்றுறு மனைவியும்,

"அம்மா! பசிகா தடைக்குதென் செய்கேம்
உப்புநீர்க் கஞ்சி யொருவாய் தாராய்"
என்றழு தேங்கு மிளமைகூர் சிருரும்;
உறுதுயர் கண்டே யுளமிகக் கலங்கிச்
செய்வ தொன்றுந் தேர்ந்தறி யாமல்

அவர்வயிற் றுணவும் அரைதனி லுடையும்
முகத்திற் பொலிவும் முன்னுறப் பெற்று
வாழ்வுறக் காண மனத்தினி லெண்ணி
அன்னவர் தம்மை யரிதினிற் பிரிந்து
காடை காகங் கட்டிடக் கண்டும்

**பரிசில் வேண்டிச் செல்வரை நாடியது கூறல்:-**

செல்வரை மனதிற் றெய்வமென் றெண்ணிக்
கல்முள் நிறைந்த கானக மதனில்
ஆமாத் திரியு மதர்வழி கடந்தும்
வேழந் திரியும் வியன்மலை தாண்டியும்
ஆழ மிகுந்த வாற்றினை நீந்தியும்

---

120. காடைகாகம் கட்டுதல்—பறவைச் சகுனம் தடை செய்தல்.
"புள்ளிடை தட்ப" —புறம்.

123. ஆமா—காட்டுப்பசு. அதர்வழி—ஒருபொருட் பன்மொழி.

124. வேழம்—யானை.

தேனினை நாடித் திசைதொறும் பறந்து
மலரினைத் தேடும் வண்டெனத் திரிந்து
முன்செய் வினையால் முழுப்பொருள் படைத்த
செல்வ ரில்லந் தெரிவுறக் கண்டவர்
தலைக்கடை கால்கள் தளர்வுற நின்று

கன்ன லைங்கணைகள் கரங்களிற் றிகழ
மன்மதன் போர்க்கு மகிழ்வுற வேறுந்
தென்றலந் தேருஞ் சிறுமதிக் குழவியும்
வெளிப்படக் கண்டு விரகநோய் கொண்டு
கொச்சி மஞ்சளும் குடமலைச் சாந்தும்

வசிய மருந்தும் மணமுறப் பூசி
கொங்கையு மாடையும் குலுங்குற நடந்து
நாடக நடித்தும் நல்லிசை பயின்றும்
கண்வலை வீசியும் காளையர் தமது
உளங்கவர்ந் தவர்த முறுபொருட் குவியலிற்

காணியு மின்றிக் கறந்துறும் வாழ்க்கைப்
பாசிழை யல்குற் பரத்தை யரில்லம்
அவசமுற் றோடி யடைக்கல மென்றும்
உம்மை யல்லா லுயிரிலை யென்றும்
செம்பொனும் மணியும் சீர்பெறக் கொடுத்து

---

130. தலைக்கடை—தலைவாயில்.

131. கன்னல்—கரும்புவில். மன்மதனுடைய ஐந்து விற்களில் ஒன்று.

“தேங்கன்னல் கமுகு செழித்தநல் வாகை
பூங்கொம்பு தாமரை போற்றுவில் ஐந்தே”

ஐங்கணை—ஐந்து புட்ப பாணங்கள்

“முல்லை அசோகு மாந்தளிர் தாமரை
அல்லி நீலம் ஐங்கணை ஆகும்” – மன்மதாலங்காரம்.

141. காணி—அளவுப் பெயர். முந்திரி, காணி என்பன அளவுப் பெயர்கள். முந்திரி மிகச் சிறிய அளவுக்கும், காணி அதனினுஞ் சிறிது மேற்பட்ட அளவிற்கும் பெயராகும். முந்திரி: ஒன்றை முந்நூற்று இருபது பாகமாக்கியதில் ஒரு பாகம். முந்திரி நான்கு கொண்டது ஒரு காணி. “முந்திரி மேற் காணி” – நாலடியார்.

கறத்தல்—வாங்கிக் கொள்ளுதல்.

மற்றவர்ப் புகழ்ந்து மகிழ்வுறச் செய்து
மழைதிகழ் மாட மஞ்சகத் தணைமேல்
அன்னவர் மார்பி னகலிடம் பெற்று
மலர்வா யமுத மகிழ்வுட னுண்டு
காம வின்பங் களிப்புறத் துய்க்கும்

செல்வருன் வருகை தெரிதலின் பொருட்டுக்
கடவுள் வணக்கமும் கலைக்குரு வணக்கமும்
உன்பெரும் புகழு முவமையில் தலைவன்
தன்பெரும் புகழுஞ் சாருமா சிரியச்
சீர்மிகு விருத்தச் சீட்டுக் கவியோர்

ஆளின் மூல மன்புற வனுப்பிச்
செல்வர்தஞ் சமயந் தெரிவுறக் கண்டு
அவர்பெருஞ் செல்வ மனைத்து முனக்கே
வந்தது போல மகிழ்ச்சிமீக் கூர்ந்து
நாவூற் றெழுந்த நனிசுவை மிகுந்த

தேனூற் றெழுந்த செழுந்தமிழ்க் கவிதை
வானூற் றெழுந்த மழையெனப் பொழிந்து
நின்று வள்ளலை நேருறக் கண்டதால்
நன்றுசெய் புண்ணியம் நான்மிக வுடையேன்
இன்றிது வேளை யிடர்செயும் வறுமைப்

பொல்லா விடத்தைப் போக்குற நின்றன்
அமுதமாங் கொடையை யளியுட னுடிப்
பெறுதற்கு வந்தேன் பெருந்தமிழ்ப் புலவன்
பொன்மனம் வைத்தெனைப் போற்றுக வெனநீ
முற்றுஞ் சொல்லி முடியா முன்பே

புலவர்க் கீந்து புகழ்மிகப் பெறலே
நில்லா வுலகி னிலையென வறியாப்
பொல்லாச் செல்வர் புற்றினில் நாகம்
என்னச் சீறி யியைபிலா மொழியில்
“நூல்பல வுணர்ந்த நுண்மதிப் புலவீர்!

---

167. அளி—விருப்பம்.

